உ

ஓம் தத் ஸ[illegible] ஹரி

சற்குருவே [illegible]




# ஸ்ரீ பிர்ம ஞானக் கிளிக்கண்ணி



## குருஸ் துதி

திருத்துருத்தி இந்திரபீடம்

கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்

மதுரை ஸ்ரீமத் கந்தசுவாமி அவர்கள்

பிரதம மாணாக்கர்

மதுரை ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை சுவாமிகள்

அனுபவ வாயிலாய்

அகமகிழ்வுடன் இயற்றியது.

1949.

ஹரி ஓம்

குரு வாழ்க. குருவே துணை.

விலை, அணா 5.

## குருஸ்தோத்திரப்பாக்கள்.

பரிபவம் பட்டுவார்ந்த பக்குவர் தமைவலிந்து
தெரிதியுன்னிலையீ தென்று செயலடங்கியாதொன்றின்றி
பொறிபுலன் கடந்துநின்ற போதமே நீதானென்ற
குருபரன் றனக்குச்செய்யக் குவலயத்தினில் வேறுண்டோ

என்ன மாதவஞ்செய்தேனோ னேதுமொன்றறியா வென்னைத்
தன்னிலை யுணரக்கூறித் தராதலப் பொருள்களியாவு
மின்னெனவறிதி யென்றன் மெய்யுணர் விளக்கியாண்ட
அன்னை நேராகுமோவென் னருட்குருநாதற்கம்மா

மலையரவ சுரரின்றி வானவரின்றி வேதக்
கலைமதி மத்தினாலே கடைந்தருண் மிதப்ப யாரு
மூலமிலா தண்மீரென்ன வோங்குகற்பக மாமென்னச்
சலிவிலாது ரைத்தகந்த சாமியே போற்றி போற்றி

---

எள்ளிநகையாடற் கிசைந்தவென் னிழிகுணங்கள்
யாவும்போக்கிக்
உள்ளமற வெவ்வுருவும் தானாகாட்டவந்த
கருணைமூர்த்தி
கள்ளிருள் போன் றவித்தைகெட நான்பிரமமென்றறியச்
செய்தபோத
வள்ளல் கந்தசாமியுனக்கொப்பாரிவ்வையகத்தே
வாய்த்ததென்னே

வானமாதியாய் வந்தசெகத்தெலாங்
கானல்நீரெனக் கண்டுதெளிந்து மெய்
மோனமாகிலை யுற்றிடுமூதறி
வானதேவரா மென்னவழுத்துவாம்

### சாற்றுக்கவி.

ஞானமாஞ்சுகக் கண்ணி நவின்றனன்
தானமே யிதற்கிங்கிலை தாரணி
மோனமா மணியாகிய மூர்த்திதான்
வானமே நிகரண் ணாமலைச்சாமியே

**ஸ்ரீமத் நாராயண சுவாமிகள் இயற்றியது.**

ஓம் தத் ஸத்.

ஸற்குருவே நம:

# ஸ்ரீ அண்ணாமலை ஸ்வாமிகளது ஜீவிய சரித்திரம்.

மஹா மகிமை தங்கிய நம் பரத கண்டத்தில் முன்
னொரு காலத்தில் அக்கினி சொரூபமாக வளர்ந்த திருவண்
ணாமலை யென்னும் க்ஷேத்திரத்திற்கு வடமேற்கில் 6 மைல்
தூரத்திலுள்ள கல்லரைப்பாடிக் கிராமத்தில் பரதவ மர
பின் கண் ஸ்ரீ கொட்டையப்பக் கோன் அவர்களுக்கும்,
ஸ்ரீமதி வாலையம்மாள் அவர்களுக்கும் ஜனித்த குழந்தை
யாக, ஏவிளம்பி வருடம் சித்திரை மாதம் பதி
னேழாம் தேதி புதன் கிழமை துவாதசி திதி உத்திரட்டாதி
நக்ஷத்திரம் கிருஷ்ண பக்ஷம் உதயாதி நாழிகை எட்டு விநாடி
நாலுக்கு மிதுன லக்னத்தில் அவதரித்து கருப்பையா
வென்னப் பெற்றோர்களால் நாமகரணஞ் சூட்டப் பெற்று
வளர்ந்து ஆறுவது வயதில் பள்ளிக்கூடத்தில் கல்வி கற்றுக்
கொள்ளும்படி செய்தனர். சிலநாட் படித்து பின்பு
பள்ளிக்கூடம் சரியாகப் போகாத நிலைமை தெரிந்து பசுக்
கூட்டங்களை மேய்த்து வரும்படி பெற்றோர்கள் கட்டளை
யிட்டார்கள். மேய்த்து வருங்கால் இவருக்கு 7-வது வயதி
லேயே தான் யாரென்ற விசாரம் உண்டாகி தன் சொரூபம்
தெரியாமலிருப்பதை விட இறப்பது மேல் என்று துணிந்து
தன் சிநேகிதனிடம் அரிவாளைக் கொடுத்து தன்னை வெட்
டும் படி சொல்லி தான் குனிந்து நின்றார். வெட்டுவதற்கு
சம்மதித்து அருகே வந்து அரிவாளையும் ஓங்கி விட்டான்.
அதற்குள் மனம் மாறுதலடைந்து அரிவாளை தூரப் போட்டு
விட்டு வெட்டமாட்டேனென்று சொல்லி விட்டான். எட்
டாவது வயதில் இவர் பிதா காலமானார். 12-வது வயதில்
தாயும் காலமானார். இதே சதா சிந்தனையாய்க் கவலையுற்று

உ

ஓம் தத் ஸத்.

சற்குருவே நம:

# ஸ்ரீ அண்ணாமலை சுவாமிகளது ஜீவிய சரித்திரம்.

மஹாமகிமை தங்கிய நம் பரத கண்டத்தில் முன்னொரு காலத்தில் அக்கினி சொரூபமாக வளர்ந்த திருவண்ணாமலை யென்னும் க்ஷேத்திரத்திற்கு வடமேற்கில் 8 மைல் தூரத்திலுள்ள கல்லரைப்பாடிக் கிராமத்தில் பரிதவ மரபின் கண் ஸ்ரீ கொட்டையப்பக் கோன் அவர்களுக்கும் ஸ்ரீமதி வாலையம்மாள் அவர்களுக்கும் ஆறாவது குழந்தையாக, ஏர்விளம்பி வருஷம் சித்திரை மாதம் பதினேழாம் தேதி புதன் கிழமை துவாதசி திதி உத்திரட்டாதி நக்ஷத்ரம் கிருஷ்ண பக்ஷம் உதயாதி நாழிகை எட்டு விநாடி நாலுக்கு மிதுன லக்கினத்தில் அவதரித்து குப்பையா வென்னப் பெற்றோர்களால் நாமகரணஞ் சூட்டப் பெற்று வளர்ந்து ஆறாவது வயதில் பள்ளிக்கூடத்தில் கல்வி கற்றுக் கொள்ளும்படி செய்தனர். சிலநாட் படித்து பின்பு பள்ளிக்கூடம் சரியாகப் போகாத நிலைமை தெரிந்து பசுக் கூட்டங்களை மேய்த்து வரும்படி பெற்றோர்கள் கட்டளையிட்டார்கள். மேய்த்து வருங்கால் இவருக்கு 7-வது வயதிலேயே தான் யாரென்ற விசாரம் உண்டாகி தன் சொரூபம் தெரியாமலிருப்பதை விட இறப்பது மேல் என்று துணிந்து தன் சிநேகிதனிடம் அரிவாளைக் கொடுத்து தன்னை வெட்டும் படி சொல்லி தான் குனிந்து நின்றார். வெட்டுவதற்கு சம்மதித்து அருகே வந்து அரிவாளையும் ஓங்கி விட்டான். அதற்குள் மனமாறுதலடைந்து அரிவாளை தூரப் போட்டு விட்டு வெட்டமாட்டேனென்று சொல்லி விட்டான். எட்டாவது வயதில் இவர் பிதா காலமானார். 12-வது வயதில் தாயும் காலமானார். இதே சதா சிந்தனையாய்க் கவலையுற்று

நாம் ஏன் பிறந்தோம் நாம் யார்? நமது வடிவமென்ன? என்று எண்ணமுதித்து ஒன்றும் தனக்குத் தோன்றாத நிலைமையில் தனக்கு மூத்த தமயன்மார் ஐவருக்கும் தெரியாமல் பதினேழாவது வயதில் புரட்டாசி மாதம் அமாவாசையன்று இரவு பதினொரு மணிக்குப் புறப்பட்டு திருவண்ணாமலை வந்து ரெயில் மார்க்கமாக சென்னை சென்று கப்பலேறி ரெங்கோன் போய்ச் சேர்ந்து வன்னியா பிள்ளை யென்ற பெரியவாளையடுத்து பன்னிரண்டு வருடம் தொண்டு புரிந்து பின்னால் ஜென்ம பூமிக்கு வந்திருக்குந் தருணம் தமயன்மார்கள் இவருக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பினர். அதற்கிணங்காமல் துறவு கொள்ள விரும்பியதை மூத்த தமயனார் கண்டு தம்பீ நீ துறவு கொள்ள விரும்புவது சரி, ஆனால் ஸ்ரீ ரமணமகரிஷியைப் போன்று உண்மை நிலையை அறிந்தாலன்றோ துறவு. இல்லையேல் விவாகம் புரிந்து கொண்டு இல்லறத்திலிருப்பதுவே நலம். ஆனால் பூரண நிலையை அடையத் தக்க திடவைராக்கியமிருந்தால் உன் இஷ்டம் போல் செய்யலாம். அத்தகைய உன்னத நிலையை நான் தடுப்பதற்கில்லை யென்றும் நான்தான் முருகனாகவே சொல்லுகிறேனென்றும் உரைத்தார். அவ்வார்த்தையைச் சிரமேற்கொண்டு வீட்டில் ஒருவருக்குந் தெரியாமல் திடவைராக்கிய முற்று துறவு பூண்டு பல இடங்கள் சென்று திருப்பூவணத்தில் சில நாள் தங்கி சிவகங்கைக்கருகிலுள்ள பூங்குடி மதுரைச் சுவாமி அவர்களைத் தெரிசனஞ்செய்து நாம் யார்? எதற்காகப் பிறந்தோமென்ற சிந்தனையுடன் சுவாமிகளுக்கு முன்பாக நிற்குஞ் சமயத்தில் சுவாமிகள் திருவுளங்கனிந்து ஆதி ஞானம் மதுரை யென்றருள் புரிந்தார்.

அன்று முதல் மதுரையில் ஒரு மண்டலம் இருக்க வேண்டுமென்ற எண்ணமுதித்தது. இதை மனதில்

வைத்துக்கொண்டு யாத்திரை புரிய வேண்டு மென்ற நோக்கத்துடன் காசி, கயா, பிரயாகை ஹரித்துவாரம், அயோத்தி, ரிஷிகேசரம், பூரிஜெகன்னாத் முதலிய அநேக ஸ்தலங்கள் சென்று மதுரை வந்து மீனாக்ஷி சுந்தரேஸ்வரரை சதா தெரிசனஞ் செய்து வரும் சமயம் ஒரு நாள் பிச்சாடனம் புரிந்து மீனாம்பிகை-பிரஸ் முன்பாக வரும் போது ஷை பிரஸ் மானேஜரும் வேதாந்த சிரவணவள்ளலு மான ஸ்ரீமான் S. கந்தசாமி பிள்ளையவர்கள் கருணையுடன் பார்த்து நீங்கள் யார் எங்கேயிருக்கிறீர்கள் எந்தவூர் என்று விசாரணை செய்ய அடியேன் திருவண்ணாமலை இப்போது ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரரைத் தெரிசனை புரிந்து கொண்டு இருக்கிறேனென்று சொல்ல அன்று முதல் அண்ணாமலைச் சுவாமி களென்ற பெயர் விளங்கிற்று.

அதிலிருந்து அநுதினமும் காலையில் இவ்விடம் வேதாந்த சிரவணம் நடப்பதால் நீங்கள் வந்து கேளுங்களென்று கட்டளையிட்டார். கட்டளையின் பிரகாரம் பதினாறு வருட காலமாக, சிரவணம் மனனம், நிதித்தியாசனம், சமாதி, சாக்ஷாத்காரம் வரை யடைந்து குரு பக்தி மேலிட்டதால் ஸ்ரீ சற்குரு தோத்திரப்பா, குருமணி மாலை, தன்னிலை விளக்கம் அடங்கிய வேதாந்த நூலை இயற்றி அச்சிலிட்டு விளக்கியுள்ளார்.

மேலும் பக்த கோடிகளுய்யும் பொருட்டு அருட் பிரசாதமாக வாய்ந்த இந்த பிர்ம ஞானக் கிளிக்கண்ணியையும் இயற்றினார்.

இந்நூலை அன்புடன் படித்து அறியக்கூடியவர்கள் நிஜானந்த போதமாகிய தன்னிலையடைந்துய்வ ரென்பது நிச்சயம்.

ஓம் சாந்தி சாந்தி சாந்தி

ஹரி ஓம் சற்குருவே நம:

**ஸ்ரீ மு. பொ. தங்கையா சுவாமி,**

மேலச்சோரிக்குளம்.

ஓம் தத் ஸத்.

## சாற்றுக் கவிகள்.

ஸ்ரீ வில்லிபுத்தூர் ஊத்துமலைக் கயிலாச சுந்தரப்
பிரதேசியாரின் பரம்பரை
மேலச்சேரிக்குளம்

**ஸ்ரீ மு. பொ. தங்கையா சுவாமிகள் இயற்றியது**

வெண்பா

மாமருவு மாமதுரை மாநகரில் வாழுமகான்
நேமமே தானாய் நிறைந்திடுமண் — ணாமலைச்சு
வாமி யருள் மதுர வாக்காங் கிளிக்கண்ணி
தேமமுதின் மேலாய்த் தெளிந்து.

இதுவுமது

நன்மறையெல் லாம்புகழும் ஞானமுறை வேதாந்த
தொன்மை சுகக்கண்ணி தொடர்ந்துவரும் — ஜென்மகன்மத்
துன்பப் பிணியைத் தொலைத்துப் புனிதமுற
அன்பர்கட்கா னந்தமருந் தாம்.

திருத்துருத்தி இந்த்ரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்
மதுரை ஸ்ரீமத் கந்தசுவாமியவர்கள் மாணாக்கன்

**ஸ்ரீ ஆவுடையப்ப சுவாமிகள் இயற்றியது**

வெண்பா

எத்தனையோ நூற்க ளியற்றினா ரான்றோர்கள்
அத்தனைக்கு மேலா யமைந்ததே — முத்தனாம்
அண்ணாமலைச்சாமி அன்பா யருள செய்த
கண்ணாங் கிளிக்கண்ணி காண்.

---

மதுரை வேதாந்த சிரவணவள்ளல் ஸ்ரீமத் S. கந்தசுவாமி
பிள்ளையவர்கள் மாணாக்கன் மேலூர் உரங்கான்பட்டி கிராமம்

**கர்ணம் P. M, சுந்தரம் பிள்ளை அவர்கள்
இயற்றியது**

வெண்பா

தானறிவா னந்தமெனச் சாந்தமுமெள்ளியிடுந்
தானங்கு ஞானதிடத் தற்பரனும் — ஞானகுரு
அண்ணாமலைச்சாமி அற்புதவாக்கான் மொழிந்த
கண்ணாஞ் சுகக்கண்ணி காண்.

ஓம் தத் ஸத்.

# பிரம ஞானக் கிளிக்கண்ணி.

## காப்பு

எவ்விநாயக னெங்கு நிறைந்தவன்
செவ்விஞானச் செழுமையா நிற்பவன்
அவ்விநாயக னென்னுரு வாதலாற்
கவ்விநாயனை கருதிப்பணிகுவேன்

## கடவுள் வணக்கம்

### கவி

இந்த வறிவே கணேசனின்பாய்த் தொழுதிடுங்கள்
இந்த வறிவே சிவனு மின்பாகயேற்றுங்கள்
இந்த வறிவே குருவா மின்பாகப் போற்றிடுங்கள்
இந்தவறி வென்வடி வேயின்பாய் வணங்கி நின்றேன்

## கிளிக்கண்ணி

உத்தமனுஞ்சற்குருவை உள்ளமதிலே நிருத்தி
நித்தமுமே தோத்தரித்து கிளியே
நின்மலமா யான் தொழுதேன். 1

பேதமற்றுத் தானிருந்தாற் பெரியோர்வணக்கமிது
நாதன் குருஸ்வாமி யன்று கிளியே
நால்வருக்குஞ் சொன்னதிதே 2

கடவுளைத்தேடுறார்கள் காண்பதில்லை கடவுள்
கடவுள் தானென்றறிந்தாற் கிளியே
கடவுளன்றி யிடமில்லையே 3

எழுதவும்படிக்கவு மெல்லோர்கட்குமெளிதே
அழிவில்லாத்தன்வடிவிற் கிளியே
அமர்ந்திருப்பதே யரிதே 4

பலவித்தங்கள் கற்றுமென்ன பலபேர்புகழ்ந்துமென்ன
கலகலெனக்கற்றதனாற் கிளியே
கட்டறுமோ ஜென்மவினை 5

சமுத்திரம் போற்படித்தேன் சம்சயமுள்ளவர்கள்
சம்சயங்குருவாலற்றூற் கிளியே
சத்தியமா முத்தியிதே 6

அகத்திலே தோன்றிடுதலபூர்வமாவேதமெல்லாம்
அகத்திலே கண்டிறிந்தாற் கிளியே
ஆனந்த மோக்ஷம்டி 7

கைமாறு வேண்டிடாத காருண்ய மாவினைப்பு
மெய்யாய் விளக்கிவிடும் கிளியே
மேதினியில் யாவருக்கும் 8

சொல்லுவதற்கரிய சொச்சொரூபத்தன்வடிவை
சொல்லவும் வேணுமதைக் கிளியே
சோகமது தொலைவதற்கே 9

ஆதிசிதம்பரமா மறிவானதன்னிலையை
ஓதியுணர்ந்தவர்க்கே கிளியே
ஓழியுமே ஜென்மவினை 10

சின்மயமாத் தானிருந்து சிறப்புற்ற மானிடற்கு
கன்மமதா லென்ன பயன் கிளியே
கருதார்களெப்பொழுதும் 11

கீதையின் சாரமதைக் கிளரிப்பாக மாக்கிவைத்தேன்
போதவடிவானதடி கிளியே
புனிதமுள்ள மானிடற்கே 12

சரஸ்வதியே ரசினின்று சாரமாய்ச் சொன்ன பொருள்
மறைப்பற்ற பேரறிவாா் கிளியே
மானிலத்திலுண்மையதாய் 13

தேனீக் குளாங்கள்போலே தேடிவைக்கும் லோபியரை
ஏன் படைத்தாய் சிவமே கிளியே
இப்புவியில் மானிடராய் 14

சிவனில்லை யென்று சொல்லிச் செப்புகின்ற ஜீவர்களே
சிவனில்லை யென்று சொன்னாற் கிளியே
செப்புதற்கு நீதான் யார் 15

சித்தசுத்திக்காகவே செப்பினேன் கன்மமிதை
முத்தியையறிவ தென்றாற் கிளியே
முதுணர்வை யுணர்வதுவே 16

சொந்தநமதுருவைச் சேர்பிக்கச்செய்ததற்கு
அந்தக்கரணமதின் கிளியே
அருள்வடிவை யென்ன சொல்வேன் 17

கற்பனையா னெல்லாங் கற்பனையென்றறிந்தால்
அற்பமுமே யில்லையடி கிளியே
அபரோக்ஷந் தான்றானடி 18

அந்தக்கரணமதின் மழுக்கற்ற பேர்களுக்கே
எந்தனின னுபவங்கள் கிளியே
இனிக்குமே சத்தியமாய் 19

அந்தக்கரணமதில் மழுக்கடைந்த பேர்களுக்கு
சேர்ந்த வனுபவங்கள் கிளியே
ஜொலிக்கா தொருநாளும் 20

அருளையடைந்தவர்கட் கடையாள மேதெனிலோ
மருளாம்பயநீங்கி கிளியே
மகிழ்ந்திருப்பார் தன்வடிவில் 21

தேசிகன் மொழிகேட்டுத் தெரியாதென்றன்வடிவை
வேச்சரியே நிக்ஷயமாய்க் கிளியே
வேதத்தின் சம்மதமே 22

துக்க மென்றகன்றவர்க்கோர் தெரிசித்து மொழிதனிலே
இக்கணத்தி லென்வடிவாய்க் கிளியே
இருந்தேனெனப் பொழுதும் 23

மோக்ஷந்தனை நான்வேண்டேன் மூவுலகந் தான்வேண்டேன்
மோக்ஷமாமென்வடிவிற் கிளியே
மூவுலகங்கற்பிதமே 24

கொடுத்திடுபவ ரெல்லாங் குவலயத்திற் றெய்வமாம்
கெடுத்திடுபவர் களெல்லாங் கிளியே
கீழான பாவர்களே 25

அளவில்லாச் சாத்திரங்க ளந்தக்கரண சுமை
உளவறிந்து நின்றதனாற் கிளியே
உதறிவிட்டே னக்கணமே 26

தன்வடிவாய் நிற்பதுவே தனித்தபெரும் யோகமது
பின்னைவேறுண் டென்றே கிளியே
பிதற்றிடுதல் வீணாமே 27

பேருமுருமில்லாத பெரும்பொருளாமென்வடிவை
பேருமூர்நிண்ணமாய்க் கிளியே
பேசிடுத லென்ன மதி 28

தர்ம மென்றுற்றன்வடிவிற் றானாகநிற்பதுவே
மர்மமுள்ள தர்மமிதாங் கிளியே
மாணிலத்தி லுண்மையிதே 29

உண்மையறிந்தஞானி யுவந்துசொன்ன வாக்கியங்கள்
இம்மையிலு மறுமையிலுங் கிளியே
எப்பொழுதும் நிக்ஷயமே 30

ஜென்மமெடுத்தப்பயன் செய்கின்றவேலையென்ன
உண்மையறிந்துசதா கிளியே
உணர்வாக நிற்பதுவே 31

சாந்த நிலையாந்தன்னைச் சார்ந்த பெரியோர்களுக்கே
சேர்ந்ததெல்லாஞ்சுகமே கிளியே
நிக்ஷயமாய்க் கண்டறிந்தோம் 32

ஞான்பிரம மென்றறிந்தால் ஞானிலத்தில் முழுமனிதன்
நான் ஜீவனென்றறிந்தாற் கிளியே
ஞானிலத்தின் மனிதப்பதர் 33

தீர்த்தந்தனக்குமோக்ஷம் ஜெகத்திலே நாம் கொடுப்போம்
தீர்த்தத்தால் நம்முடைய கிளியே
ஜென்மங்க ளொழிவதில்லை 34

மெய்யான சாஸ்திரத்தில் மிதக்கும் பரோக்ஷவெண்ணை
நெய்யாகச் செய்துவைத்தேன் கிளியே
நின்மல மனத்தோருக்கே 35

தாண்டவராயர் செய்த தத்வ நவநீதத்தில்
தாண்டவமாடுகின்றேன் கிளியே
தன்மயமா யெப்பொழுதும் 36

சுருதியுபசாரமதாய்ச் சொன்னதொரு வாக்கியத்தை
கருதியறிந்து விட்டாற் கிளியே
கலங்கிடா தெவ்விதத்தும் 37

ஒருசொல்லாறிவைக்கு முன்னமையுள்ள நூலிதுவாம்
மறுசொல்லுக் கேதுவில்லாச் கிளியே
மவுனத்தில் முடிந்து விடும் 38

நீயேதான் பிரமமென்று நேராகச்சொல்லி விடும்
நீயேதானில்லையென்றாற் கிளியே
நிலைக்குமோ பின்னை யொன்று 39

அஞ்ஞானத்தை தவிர்க்கு மப்யாசியானவர்க்கு
மெஞ்ஞானமே வீடாங் கிளியே
விளம்பினே னுண்மையிதே 40

திரிகரண சுத்தியுள்ளோன் தீரனுமுமுக்ஷுவிற்கே
ஒரு குருவா முத்தமனாற் கிளியே
உடனேதானே மோக்ஷம் 41

பந்தமோக்ஷமுமில்லை பரஜீவ ஐக்கியமில்லை
சொந்தமா நமதுருவைக் — கிளியே
சோதனைசெய் தறிவதுவே — 42

எல்லையற்ற பூரணம் நானென்று நிறைந்து நின்றேன்
சொல்லளவி லில்லையிதைச் — கிளியே
சோதித்தே யறிந்திடுங்கள் — 43

அளவில்லா வண்டமெல்லாம் விண்டிடாப் பிரமமே
யென்னையறிந்து விட்டாற் — கிளியே
ஒருக்காலும் பிறப்பில்லையே — 44

சொந்த வடிவினிற் சுகமார்க்கு எப்பொழுதும்
அந்தப் படிப்பையெந்தன் — கிளியே
அகத்திடத்திலே யறிந்தேன் — 45

அகந்தனிலே யுண்டான ஆரோபமாம் பொருளில்
இகந்தனிலே மோகம் வைத்துக் — கிளியே
ஏன் கெடுவீர் மானிடரே — 46

அண்டமெல்லாந் தன் வடிவாயனுபவத்திற் கண்டறிந்தால்
உண்டோ விதற்கிணையே — கிளியே
உண்மைப் பொருளெப்பொழுதும் — 47

பாடினேனிந் நூலைப் பங்கமறக் கொள்வதற்கு
ஈடுண்டோ விவேகத்திற்குக் — கிளியே
இன்னுமொரு நூலுளதோ — 48

ஆதிகுருவாகிய அறிவான தன்னிலையே
ஜோதி வடிவாயறிந்தாற் — கிளியே
சொர்க்கமுமிதுவாமடி — 49

நான்பெற்ற பாக்கியத்தை ஞாலத்திலாரறிவார்
தேனூறியானேனுன் — கிளியே
திகம்பரனையெப்பொழுதும் — 50

அன்ன தானம்புரித லதிக மென்று சொன்னாலும்
தன்னையறிவதுவே கிளியே
தலை சிறந்த புண்ணியமாம் 51

கடவுளுமென்றறிந்தாற் கைகண்ட புண்ணியமாம்
கடவுளு மல்ல வென்றாற் கிளியே
கைகண்ட பாவமிதே 52

குண்டு போட்டு மாராது குவிந்து நின்ற தன்னிலையை
கண்டவர் மயங்குவாரோ கிளியே
கலங்கார்க ளெவ்விதத்தும் 53

வெளிக்குள் வெளியதனை விவேகத்தாற் கண்டறிந்தேன்
ஒளிக்கெல்லா மொளிநானாய்க் கிளியே
உணர்வாய் நிறைந்து நின்றேன் 54

பூமியிலெருப் போட்டால் புனித முள்ள நெல் விளையும்
நேமமுள்ள குரு பத்தியாற் கிளியே
நிற்குமே மோக்ஷமது 55

நவநவமாம் யுத்திகளை நம்மிடத்திற் கண்டறிந்தால்
தவத்தின் மகிமையிதே கிளியே
தக்க பெரியோர்களுக்கே 56

சிவமே நாமென்றறிந்தாற் சிவனடியாரனைவரும்
தவங்களெல்லா முடித்த கிளியே
தக்க பெரியோராவரே 57

பளிக்கு மண்டபத்துணின்று பதைத்திடு நாயாகாமல்
ஒளிக்குளொளியாக்கண்டு கிளியே
உள்ளமுமகிழ்ந்து நின்றேன் 58

ககன முதித்தொடுங்கக் கண்டவர்களிருந்தால்
வகையாய் நாம்பிறந்ததாவுங் கிளியே
வாஸ்தவ மெனலாமே 59

கிடந்து தூங்குஞ்சுகம் போன்றிரக ஞானிசுகம்
கிடந்து தூங்குஞ்சுகம் போற் கிளியே
செம்பிரத் துறவி சுகம் 60

தன்னையே பொருளாகத்தானேயறிந்துவிட்டால்
பின்னை ஞானத்தின் முடிவு கிளியே
பேராத வுண்மையிதே 61

எந்தப்பிரமமதை யிச்சித்தடைவார்களோ
அந்தப்பிரமமதைக் கிளியே
அகமெனக் கண்டறிந்தேன் 62

திரிமூர்த்திப் பதவியெல்லாந் திரணமென வறிந்தால்
ஒரு வைராக்கிய முடிவு கிளியே
உண்மையுள்ள முமுக்ஷுவிற்கே 63

புண்ணிலேயானை வைத்தென் போதமிழந்திடாமல்
தன்னியனாகச்செய்த கிளியே
தவமகிமை யென்ன சொல்வேன் 64

கோடான கோடிபேர்கள் கோடிவிதஞ் சொன்னாலும்
கோடியே தனையறிந்தோர் கிளியே
சடுங்கார்க ளெவ்விதத்தும் 65

வேதங்கடந்தமஹான் வெகுவிதம் நடந்தாலும்
வேதமே சம்மதிக்குங் கிளியே
வேதங்க ளவர்க்கில்லையே 66

திடமில்லாப் பேர்களுக்குத் திடங்கொடுத்தார் சற்குருவும்
திடமே வடிவெடுத்த கிளியே
தீரனுஞ் சொன்னதிதே 67

ஆரணத்தின் வாக்கியத்தை அனுபவத்திற் காட்டிவைத்த
பூரண நீ யென்று சொன்ன கிளியே
போதமாந் தேசிகனே 68

ஆணவத்தை மூன்று மாறு தத்துவமும்
நானல்ல வென்றறிந்து கிளியே
நானாய் நிறைந்து நின்றேன் 69

கூடிப் பிரிந்திடாத கூடஸ்தப்ரம்மத்தை
நாடித்தானே தெளிந்தாற் கிளியே
நல்மான மோக்ஷமிதே 70

அர்சிற்கரசனாக ஆக்கிவைத்தார் தேசிகரும்
மூர்சனறந்து சொன்னேனடி கிளியே
மும்முக்ஷுக்க ளானவர்க்கே 71

ஆக்குப்பொரையினில் வர்தகப்பட்ட முயலதுபோல்
தார்க்கற்ற தன்மயமாய் கிளியே
தங்கினதை யென்ன சொல்வேன் 72

பசுமரத்தாணியைப்போற் பதித்துக்கொண்ட போர்களுக்கு
ருசிக்க வேறு நூலுளதோ கிளியே
ருத்திரன் மேலாணை சொன்னோம் 73

ஞானிகள் சொன்னதுவே ஞாலமதில் வேதமென்
ஆனியற்ற பேர்கள் தானே கிளியே
அறிந்திடுவா ருண்மையதாய் 74

கவிகள் பலவுங்கற்றுக் கண்டபடி சொல்லிட்லாம்
தவியாமற் றன்வடிவிற் கிளியே
தங்கினதை என்ன சொல்வேன் 75

கட்டைதனிலே கண்ட கள்வன் போலாகிடாமல்
நிட்டை யென்ற நிக்ஷயத்திற் கிளியே
நிற்பவர்கள் முத்தர்களே 76

அளவில்லா ஜென்மமெல்லா மரணிமிடத்தினீக்கி
உள் பொருளாந் தன்வடிவிற் கிளியே
உறையவைத்த தேசிகனே 77

தூரமல்ல வேறுமல்ல தூயநாந் தன்வடிவும்
புறமனமுள்ளவர்க்குக் கிளியே
பகுத்தறிய வொண்ணாதே 78

தன்மயதிருஷ்டியுள்ள தக்கபெரியோர்களுக்கே
இம்மையிலே முத்தியதாங் கிளியே
இதிலேது மையமில்லை 79

தூங்காமற் றூங்குஞ்சுகந் தூங்கிக்கண்டாற் றன்னிடத்தில்
நீங்காமனீங்கிவிடுங் கிளியே
நீடிய ஜகமனைத்தும் 80

சந்தியாவந்தனமென்றுஞ் சர்வேச ஜீவனுமே
முந்தியொன்று மறிவதுவே கிளியே
மூதன்மையாஞ் சந்தியிதே 81

சித்தியிலே மயங்கிச் சிறப்புற்று வாழ்ந்திடினும்
முத்தியவர்க் கில்லையடி கிளியே
மொழியலா முத்தியைப்போல் 28

அந்தகன் கைவிளக்காம் அறியாதான்கற்ற கல்வி
சொந்தவடி வறியான் கிளியே
ஏதுஞ் சுகமாமோ 83

பரம்பொருளாந் தன்னையே பதமாய்ப்பிரித்தறிந்
திரமாக நின்றுநீயுங் கிளியே
தெளிந்து விளையாடிடுவாய் 84

கருமங்களிற்கட்டுண்டு களிக்குங் கயவர்களே
மருமமா மறிவினின்று கிளியே
மகிழ்ந்து விளையாடிடுவீர் 85

தேசிகனையன்றிவேறு தெரிசிக்கத் தெய்வமில்லை
யோசித் துணர்ந்தவர்க்குக் கிளியே
உண்மையுள்ள சொர்க்கமிதே 86

தன்னையறியாதவர்க்கே தலையளவு பஞ்சமதாம்
தன்னையறிந்து விட்டாற் கிளியே
தலைசிறந்த பாக்கியவான் 87

அறிவை யறியவைத்த ஆரியன் சொற்கேளார்கு
பிரியாது ஜென்மவினை கிளியே
பெருமான் மேலாணை சொன்னோம் 88

ஆசிரியரானாலு மறிவையன்றி வேறு சொன்னால்
யோசித்து நீக்கிடலாங் கிளியே
உண்மை யறிந்தவர்கள் 89

அறிவையன்றியீசன்வே றன்னியமாயிருந்தாற்சொல்
தெரிந்துநாமறி வென்று கிளியே
தேசிகன் மேலாணை சொன்னோம் 90

நிஜாநந்தபோதமதி னிலைநின்று பார்த்தேனுன்
அஜாத வாத மேயுள்தாங் கிளியே
அப்ரோக்ஷந் தான்றனடி 91

தன்னைமறந்தவனே தனைக்கொன்ற பாதகனும்
தன்னையறிந்தவனே கிளியே
தவமுடித்த மேலோனும் 92

ஓடியலைந்துமன முள்ளுழன்று வாடியதை
நாடித் தானுக்கிவைத்த கிளியே
நற்பரமாஞ் சற்குருவே 93

இருளற்ற ஞானமதை யின்பாயறிந்திடாமல்
வருஞ் ஞான மென்றுரைக்குங் கிளியே
வம்பர்களுக் கென்னசொல்வோம் 94

இந்த ஞானவர்க்கியத்தை யிகழ்ந்த பெரும் பாவியர்க்கே
சேர்ந்தாரகர் தனிலே கிளியே
தோய்ந்தே யழுந்திடுவார் 95

வேணுமென்றுற் பெண்கொள்ளு வேண்டாமென்றுற் றள்ளிவிடு
ஏறுணர்ந்து தள்ளிவிட்டேன் கிளியே
நான் மறைகள் சொன்னபடி 96

சதுமுத்திரையில் நாடில் மூவரானாலும்
ஏமமா யறிந்தாலுங் கிளியே
நிகழ்ந்திடுங் கலகமதே 97

நல்லதொரு பிரமம் நாமாயிருக்கும் போது
இல்லறந் துறவறங்கள் கிளியே
எந்தனுக்கே தெப்பொழுதும் 98

குருசிஷ்ய சம்வாதத்தைக் குருபுத்ரரேயறிவார்
மருவுமழுக் குடைய கிளியே
மானிடப் பேயறிந்திடுமோ 99

திரிமூர்த்திகளானாலுந் தீயவழியில்நடந்தால்
திருசட்டஞ் செய்திடலாங் கிளியே
உண்மை வழியில்நிற்போன் 100

பிரமத்தையறியாதோன் பிழையுற்ற சூத்திரனாம்
பிரமத்தை யறிந்தவனே கிளியே
பெரிதான பிராமணனும் 101

அறிவையறிந்தவருக் கனுஷ்டானஞ் சொல்லுகிறேன்
பிரியமற் றன்வடிவிற் கிளியே
பிரமமாய் நிற்பதுவே 102

நாரணற்கும் நான்முகற்கும் நடுவே முன்நித்தசிவம்
பூரணனாமென்றறிந்தாற் கிளியே
புனித முள்ள சொர்க்கமிதே 103

காயகற்பங் களென்றுற் கண்டறிதல் தன்னறிவை
நோயற்ற வாழ்விதுவே கிளியே
நுண்ணறிவு நிறைந்தவர்க்கே 104

கூட்டிக் குமித்தாலே குளிர்காய்ந்தேன் குப்பையெல்லாம்
நாட்டிலுள்ள பேர்களுக்குக் கிளியே
நான்றியச் சொல்லி விட்டேன் 105

ஞானதீர்த்தந் தனிலே ஸ்நானஞ் செய்த பேர்களுக்கு
ஜனனப்பிறவியது கிளியே
ஒழிந்திடுதல் நிச்சயமே 106

மாசற்ற தன்வடிவை மானிடர்களெல்லோர்க்கும்
நேசித்தே யுணரும்படி கிளியே
நிகழ்த்தினே னுண்மையிதே 107

உடலெனும்பந்தம் நீங்கி யுணர்வே நாமென்றறிந்து
நடனம் புரிந்திடுவோம் கிளியே
நானிலத்தி லெப்பொழுதும் 108

பெத்தனைக் குறித்து நாமுத்தனென்று சொன்னோமே
முத்தனுமில்லையடி கிளியே
மோனமதில் நின்றவர்க்கே 109

தத்வமஸி வாக்கியத்தைத் தாரணைபுரிந்தவர்க்குச்
சத்தியமா முத்தியிதே கிளியே
தாரணியில் யாவருக்கும் 110

உரிமையில்லாத் தன்னுடலிலொருரோமந் தோன்றுதல் [போல்
அறிவான தன்வடிவிற் கிளியே
அண்டமெல்லாங் கற்பிதமே 111

அண்டமெல்லாம் நிறைந்தே அறிவாக நின்ற தன்னைக்
கண்டவர்க்கு மோக்ஷமடி கிளியே
கண்டிடாற் கில்லையடி 112

அடிநடுமுடி யின்றி அறிவான தன்னிலையில்
இடம்புரிய விடமுமுண்டோ கிளியே
நன்மன முள்ளோர்க்கே 113

அறிவையறிந்துநின்றாலதுவேதான் பிர்மவித்தை
பிரிதில்லை ஜெகந்தனிலே கிளியே
பெருமான் மேலாணை சொன்னோம் 114

சிவசின்னம் பூண்டதனாற் றீர்ந்திடுமோ ஜென்மவினை
சிவமே நாமென்றறிந்தாற் கிளியே
ஜென்மவினை தீர்ந்திடுமே 115

வேதமடைந்தவிடம் விவேகியரகத்தினிலே
நாதனின்றிருவருளாற் கிளியே
நானறிந்து சொல்லிவிட்டேன் 116

காமாதிகளை வென்று கருத்தொன்றாய் நிற்பவர்க்கே
ஏமன் பயமில்லையடி கிளியே
எப்போது மறிவவரே 117

அன்னிய ஜோதியெலா மவிர்ந்திடுஞ் ஜோதியதாம்
தன்னியன் றன்வடிவங் கிளியே
தனித்த பெரும் ஜோதியடி 118

அகவுழைப்புள்ளவர்க்கே அறிவுதானாய் விளங்கும்
இகவுழைப்புள்ளவர்க்குக் கிளியே
எப்படித்தான் விளங்கும் 119

பிரமம் நாமென்றறிந்தாற் பீதியற்ற லங்கோடு
மருமமுள்ள மோக்ஷமிதே கிளியே
மாநிலத்தில் யாவருக்கும் 120

மூன்றாசையுள்ளவர்கள் மூவுலகினின்றாலும்
தோன்றாது தன்வடிவங் கிளியே
தொந்தமற்றுத் தானிருக்க 121

கன்னல் மொழியாய்லென்னைக் கரையேற்றிவிட்ட தந்தை
அன்னையினு மினிதாங் கிளியே
அன்பான தேசிகனே 122

வேதாந்த முற்றறவும் வீணென்று தூஷிப்பவன்
நாதனற்ற மனைவியர்போற் கிளியே
ஞானிலத்திற் பாவியவன் 123

உந்திக்கமலமுதி லேசங்குஞ் சதாசிவத்தைச்
சொந்தவடி வாயறிந்தாற் கிளியே
சொர்க்கம்நா மேனுகோம் 124

ஞானந்தனையறிந்து ஞானமாய் நிற்பவர்கள்
ஞானி வசிட்டரவர் கிளியே
ஞானிலத்தில் யாவருக்கும் 125

புகழினுக் கிச்சைப்பட்டு புகட்டிவைத்த வாக்கியங்கள்
இகழ்ச்சியே தந்துவிடுங் கிளியே
இதிலேது மையமில்லை 126

அஞ்ஞான முற்றவர்க்கே அறையவில்லை சாஸ்திரங்கள்
விஞ்ஞான முமுக்ஷுவிற்கே கிளியே
மேதினியிற் சொன்னேனடி 127

நானென வினையின்றாய்ப் பிறிக்கறியான்
வீணான ஜென்மமிதே கிளியே
வேசரியாய்ப் பிறந்திறப்பான் 128

பண்டிதர் முதலாகப் பாமரர்களெல்லோரும்
கண்டு தெளிவதற்கே கிளியே
கருணையாய்ச் சொல்லிவிட்டேன் 129

விச்வர்சமென்பதுவே விபுவாந்தன்மயறிதல்
ருசியாயறிந்து விட்டாற் கிளியே
ருத்திரனு மன்னவனும் 130

தன்னை மறந்துவிட்டுத் தற்பரத்தைத் தேடுவது
தன்மனைவி விதவையென்று கிளியே
தானே புலம்புதல்போல் 131

வேதமெனும் வனத்தில் வெகுநாளாய்த் தேடிக்கண்ட
போதமெனும் பச்சிலையைக் கிளியே
புசித்தேனே தானாக 132

விண்ணோரினுஞ் சிறந்த வேதாந்தப்பதவியைக்
கண்ணினு மேயினிதாய்க் கிளியே
கருத்திலே யான்பணிவேன் 133

அத்துவித ஞானமொன்றே அகற்றும் பிறவிநோயை
அத்துவித ஞானமெல்லாங் கிளியே
அத்தமோ பிறவிநோயை 134

அம்பிகையின் வடிவு மபரோக்ஷந் தானென்று
அம்பிபறிந்து விட்டாற் கிளியே
அநிலத்தில் மோக்ஷமிதே 135

வீட்டையிலிருக்க வினைத் தலைவழி நல்லோரும்
வீட்டையை விட்டெனக்குக் கிளியே
நீக்கவிட மில்லையடி 136

வீட்டையிலேயிருக்க வினைப்படுவே பந்தமெனக்
கட்டாயப்படுத்திச் சொன்னார் கிளியே
கண்டறிந்த பெரியோர்கள் 137

அறிவெனும் வுன்னிமூட்டி அனைத்து மெரித்துவிட்டேன்
தெரிவுதற்கு யாதுளது கிளியே
ஜெகந்தனிலே யெப்பொழுதும் 138

கண்டகனவையெல்லாங் கருத்தூன்றிச் சொல்லிவிட்டேன்
கண்டறிந்த பேர்களிதைக் கிளியே
கலங்கார்க ளெப்பொழுதும் 139

வேதங்களுக்கெட்டாத விவேகமவுனனர்தம்
நாதனருளாலறிந்தாற் கிளியே
நானிலத்தில் மோக்ஷமடி 140

விண்ணினு முண்ணினும் விளங்கியிலங்கும்படி
நண்ணியே வருள்சுரந்த கிளியே
நற்பர குருமூர்த்தி 141

நான்பிரம மென்றறிந்தால் நன்மை மிகுமைக்கியமிதே
தானென் றென்றறிவதுவே கிளியே
தாரணியிற்சின் முத்திரையே 142

விரக்தியாம் ஞானியர்க்கு வேண்டும் பொருளையெல்லாம்
சிரத்தின்மேற் சுமந்தீசன் கிளியே
தேடியருள் புரிவான் 143

குற்றமுள்ள பேர்களுக்குக் குற்றமாய்த் தோன்றுமிது
குற்றமற்ற பேர்களுக்கே கிளியே
குற்றஞ்சொல்ல யிடமுமுண்டோ 144

பூரணத்தினிலையான் புத்தியில் ரோகமுள்ளோன்
ஆரணத்தின் குற்றமல்லக் கிளியே
ஆழ்ந்தாரீ வூன்றிப்பார்த்தால் 145

சத்திசிவர்தானென்று சங்க்ரகமாய்யறிந்தால்
சத்தியமா முத்தியிதே கிளியே
சகத்திலுள்ள பேர்களுக்கே 146

ஊழான சஞ்சிதத்தை யொழித்த மஹான்களையும்
பாழான ஜீவரெல்லாங் கிளியே
பழி சொன்னாலஞ்சுவரோ 147

போற்றித் தனையறியார் புத்திகெட்ட மானிடரே
தூற்றுவதேன் நல்லோரைக் கிளியே
தூய்மையற்ற பேதமையால் 148

மைமாயையாமனதை மதியாலறிந்து விட்டால்
மையார் பிறவியிலே கிளியே
நவின்றனர் ஜனகருமே 149

முற்றுந் துறந்திருந்த முனிவர் பேராகிலுமே
பற்றொழிந்தாலன்றி யந்தோ — இனியே — 150
பலியாது தன்வடிவம்

யானையின் றன்பலத்தை யானையறியாததுபோல்
தானும் பலமறியார் — இனியே — 161
தாரணியில் மானிடர்கள்

வேதவித்து தவருன் விவேகமுள்ளவப்பியாசி
வேதங்கடந்த ஞானி — இனியே — 162
விநோதமதை யென்ன சொல்வேன்

இடிவிழுந்தால் வீடு பிடிந்து தகர்ந்துவிடும்
இடியையுந் தகர்த்துவிடும் — இனியே — 153
இன்பமுள்ள ஞானமொன்றே

நீர்மேலெழுத்ததுவும் மில்லாது கண்டிருந்தும்
பாருலகம் நின்றிடுமோ — இனியே — 154
பரம்பொருளாந் தன்வடிவில்

மணமெனும் பெண்மணியை மணந்தவர்களெல்லோர்க்கும்
தினமுஞ் சுகவாழ்வே — இனியே — 155
தேசிகரா மன்னவரே

புத்தியைத் தீட்டுகின்ற புருடனுக்குச் சொல்லுகிறு
கத்தியைத் தீட்டுகின்ற — இனியே — 156
கபவருக்கு சொல்லவில்லை

பேதபாவனை பெற்ருல் பிரமனனு மென்ன
ஏதமாம்பிறவி நீங்காக் — இனியே — 157
இசைத்திடுமே வேதமெல்லாம்

தழுக்கடித்து மொழிந்தேன் தாரணியிலெல்லோர்க்கும்
கழுக்கப்படுத்த வில்லை — இனியே — 158
[illegible] மிக்க மேலோர்கள்

அத்தனையும் பொய்தானே அனந்தவடிவம் நானே
சத்தியமாகச் சொன்னேன் கிளியே 159
சகத்துள்ளோ ருணர்வதற்கே

ஞானசற்பம் தரித்து ஞானப்புதல்வன் பெற்றேன்
வான சிதாகாசன் கிளியே 160
வையகமெல்லாம் நிறைந்தோன்

தாடிமீசை நரைத்தார் தனையறியாப் பாலர்களே
வாடிவதங்கி வெந்து கிளியே 161
வாழ்நாளைப் போக்காதீர்கள்

சொல்லிற் செயித்திடலாஞ் சோர்வில்லாத் தன்மையினால்
அல்லும்பகலும் மில்லா கிளியே 162
அறிவானுற்கென்ன குறை

வேதாந்த வாயுதத்தை விட்டுக்... பிடித்தால்
நாதனு மவன்தானே கிளியே 163
நானிலத்தில் யாவருக்கும்

நானே பிரமமென்றால் நாவின் மதுரமிதே
தானே தானாகி நின்றால் கிளியே 164
தாரணியிற் சஞ்சீவியாம்

சாக்கிரத்தையே கனவாய்ச் சாக்கிரதையா யறிந்தால்
நோக்கவேறு மோக்ஷமுண்டோ கிளியே 165
நுண்ணறிவு வாய்ந்தவர்க்கே

உண்டாலினிக்குதடி உண்மையுள்ள தன்வடிவம்
கண்டறிந்து சொல்லிவிட்டேன் கிளியே 166
கருத்தான மானிடர்க்கே

ராமமந்திரமான ரமிப்பான தன்வடிவை
நேமமாயறிந்து விட்டால் கிளியே 167
நிக்ஷயமா மோக்ஷமடி

சமாதியென்ற தன்வடிவைச் சம்மாபறிவதுவே
சமாதியென்றால் மற்றதொன்றைக் கிளியே
சார்ந்துமே வாழ்வதுண்டோ 168

ஞானமறிந்தேனில்லையென்று ஞானிலத்திலென்ன சொல்வேன்
ஞானமறிந்து விட்டாற் கிளியே
ஞானிலத்தில் மௌனமிதே 169

அறிவையே நானென்று அனுஷ்டித்த பேர்களையே
பிரியமுடன் நான்தொழுவேன் கிளியே
பேதமற்ற தன்வடிவாய் 170

கன்னியை மணம்புரிதல் கன்னிகழிவதில்லை
கன்னி கழிவதென்றால் கிளியே
கடவுளைக் தனையறிதல் 171

பஞ்சசந்தனைத் தவிர்த்துப் பரமானந்தங் கொடுத்துப்
பிஞ்சிலெனக் களித்த கிளியே
பெருமானார் தேசிகனே 172

காணாமல் வேணதெல்லாங் கண்டபடி சத்தியென்ன
கோணாம லென்னுடனே கிளியே
கூசாது பேசிடுவீர் 173

முகத்திலே மீசையுள்ள முழுமனிதனேயானால்
இகத்திலேயிப்பொழுதே கிளியே
என்முன் வந்து பேசிடுவாய் 174

கடைந்துபார்த்தால் நாமே கடவுள் சொரூபமென்று
கடந்த மகான்களுமே கிளியே
கண்டறிந்து சொன்னதிதே 175

அகந்தனிலேயுண்டான அறிவுருவாந் தேசிகனே
இகந்தனிலே கண்டறிந்தோர் கிளியே
எல்லோரும் வாழியவே 176

திருச்சிற்றம்பலம்

## குருஸ்துதி.

இராகம் — நாதநாமக்கிரியை  தாளம் — ஆதி

ஆனைமுகவனை  அம்மலர் ஞானவள்ளல்,
தானென ஞானானந்த  சாமியல்லோ குருநாதா

ஓமென்ற வோரெழுத்தே  ஓர்வடிவாகி வந்து
யாமென்றறிய வைத்த  அற்புதனே குருநாதா

சச்சிதானந்த சுவாமி  சாற்றிய வாக்கியத்தை
நிச்சயப்படுத்திய  நித்தியனே குருநாதா

இந்திர பீடத்தி  லிணங்கின பேருக்கெல்லாம்
சொந்த வடிவாய்க் காட்டும்  ஜோதிமயமாம் குருநாதா

சாது சங்கத்தைச் சார்ந்து  சதாகாலம் வாக்கமிர்தம்
போதும் போதுமெனத் தந்த  புண்ணியனே குருநாதா

மூடி விழிக்கு முன்னே  மூவுலகுங் கரைந்து
நாடித் தானாக்கி வைத்த  நற்குணனே குருநாதா

சுந்தர நாதனும்  ஜோதி யகிலாண்டமும்
மைந்தராய்ப் பெறற் கென்ன  மாதவமோ குருநாதா

ஆரெனைக் கேட்டாலு  மனுபவமாகச் சொல்ல
பாரிலெனக்கீந்த  பண்டிதனே குருநாதா

தானாகு மேனிலையைச்  சாருமுமுக்ஷுக்கட்கு
தானாஞ் செங்கோலைத் தந்த  தற்பரனே குருநாதா

வீணு முலகமதில்  வீணாய்க் கெடாமலெனைத்
தானாச் செய்த தொரு  சாத்விகனே குருநாதா

அகத்தை யறிவொண்ணா  அந்தகனை வென்றெனைச்,
சுகத்தின் வடிவாய்ச் செய்த  சுந்தரனே குருநாதா

அறிவின் வடிவமென் றப்ரோக்ஷ ஞானநிலை
தெரியும்படிக்குச் சொன்ன சின்மயனே குருநாதா

காடுமலைகளிலுங் கலங்கித் திரிந்த வென்னை
வீடு காட்டிக்கொடுத்த விலக்ஷணனே குருநாதா

அறிந்தேநு வறியாமலோ அறியாமதலைச் சொல்லை
தெரிந்தூ ரமிக்கச்செய்த தேசிகனே குருநாதா

மிதி கல்லாயுற்ற வென்னை மிதியாமலே யெல்லோரும்
துதிக்கும்படிக்குச் செய்த தூயவனே குருநாதா

மறையின் பொருளை யெல்லா மறைக்காமலே யெடுத்து
உரைத்தறியச் செய்தவென் னுத்தமனே குருநாதா

கருணைக் கண்ணாலென்னைக் கரையேற்றிவிட்ட தந்தை
அருமையை யென்ன சொல்வேன் ஆண்டவனே குருநாதா

உத்திக்கமலைமதி லொளிருஞ் சதா சிவத்தை
அந்தக் கரணமதி லறியவைத்தாய் குருநாதா

மாயா மயக்கத்திலே மயங்கிக் கெடாமலெனைத்
தாயாய் வந்தாட்கொண்ட தற்பரனே குருநாதா

வெட்ட வெளிப்பட்டமதை விவேகத்தினாலெனக்குத்
திட்டப் படுத்திவிட்ட சின்மயனே குருநாதா

மாது சங்கத்தை யெல்லா மதித்து யூகத்தினாலே
சாது சங்கமாய்ச் செய்த சற்குணனே குருநாதா

குருகிருபையைப் பெற்றேன் கோடீஸ்வரனானேன்
மருப்பு மிதற்குமுண்டோ மாதவனே குருநாதா

பயத்தைப் பறக்கடித்துப் பதமான தன்வடிவில்
நயமாகச் செய்துவைத்த நாயகனே குருநாதா

என்னஞானமோ விதி வெவ்விதத்தும் மழுவா
தன்னைத் தாஞகச் செய்த சத்தியனே குருநாதா

கல்லினு முரமான கடின தத்துவங்களை
சொல்லி யறியவைத்த சுயஞ்சோதியாங் குருநாதா

என்ன செய்தேனே நானு மென்னை யறியாமலே
தன்னைத் தாஞகச்செய்த தத்துவனே குருநாதா

அண்டமுழுது மோங்கி அனுரூதமாய் நிறைந்து
தொண்டருளத்தினின்ற தூயவனே குருநாதா

தன்னையே தாஞக்கித் தன்ஞனை வேறில்லாமல்
சொன்ன குருவுக்கென்ன சொல்லுவனே குருநாதா

எத்தனை கோடி யுகம் என்ன சொன்னாலுங்கூட
ஒத்தி தனையறிந்தா லுண்டோ சொல்ல குருநாதா

பன்னிப் பன்னியேயிதைப் பலகாலும் பேசினலும்
எண்ணிக்கையிலடங்கா வென்னுருவே குருநாதா

கற்பனைகளற்றுக் கடந்த மவுனந் தாஞய்
அற்பமு வேறில்லாத ஆண்டவனே குருநாதா

அச்சங்களை யகற்றி ஆனந்தந் தானெனவே
நிக்ஷயப் படுத்திய நின்மலனே குருநாதா

அமரர்கட்கு மெட்டாத அறிவானவோர் பொருளை
தமதுருவாக்ச் செய்த சாஸ்வதனே குருநாதா

விசனமென்ற புதரை விவேக காற்றினூற்றாத்தி
நிசமான தன்மணியாய் நிற்கவைத்தாய் குருநாதா

சன்னிதான மகிமை சார்ந்த வெனக்குவாத
உன்னதமென்ன சொல்வேன் உத்தமனுங் குருநாதா

மாயையால் மயங்குதே மானில ஜீவரெல்லாம்
மாயையும் மயங்குதே மதியா மறிவிற் குருநாதா

ஆதிக்கமென்று மில்லா அனிர்வசனிய மாயை
சோதிக்கிலில்லையே தூயவனே குருநாதா

## மங்களம்.

இராகம் தோடி தாளம்—ஆதி

மங்கள மங்களமே நித்திய சுப மங்கள மங்களமே

அனுபல்லவி

துங்கக் கஜமுகற்கும் தூய முருகனுக்கும்
சங்கு சக்ரபாணிக்கும் சங்கரனயனுக்கும் (ம)

மண்முழுதும் நிறைந்த மாதவன் பாதுகைக்கும்
பொன்மயமான எங்கள் புண்ணியர் திருவடிக்கும் (ம)

விண்முழுதும் நிறைந்த வேந்தர் குருபாதத்திற்கும்
தன்மயமான எங்கள் சாது சங்கத்திற்கெல்லாம் (ம)

சச்சிதானந்தஸ்வாமி சார்ந்த பரம்பரையின்
சத்து சொரூபகாந்த சுவாமி கழலிணைக்கும் (ம)

---

எண்ணின எண்ண முடித்து விட்டேன்
என்குரு க்ருபையைப் பெற்றுவிட்டேன்
தன்வடிவாக நிறைந்து விட்டேன்
தனிஞான வள்ளலாயாகிவிட்டேன்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் அருளிய

## ஆத்மானு சந்தானக்கிரமம்—தசகம்.

ஓதுமண்ணில்லை புதகமிங்கில்லை யொளிருந்தேசில்லை காலில்லை
பூதவிண்ணில்லை யிந்திரியமில்லை புகன்றவைகளின் றிரளில்லை
யேதுமேவிய சாரமேவி யிறப்பதாலிச் சுழுத்தியின்
மீதியாயுள பூரணானந்த மேனியான சிவோகமே. (1)

சாதியுமில்லை யாச்சிரமமில்லை சாதியாச்சிரம தருமமா
நீதியுமில்லை தாரணையில்லை நிதித்தியாசன யோகமே
யாதியுமில்லை கற்பனையப வாதவாசிரய மாதலால்
சோதியாய்நில்லை நின்றபூரண சுத்தரூப சிவோகமே. (2)

தந்தைதாயிலை தேவருமிலை தங்குலோகங் களுமிலை
சந்தவேதங்க ளில்லையாகங்கள் சகல தீர்த்தங் களுமிலை
தொந்தமற்ற சுழுத்தியிற்றெருட ராதுநீங்குத லான்மகா
னந்தபூரண சத்யகேவல ஞானநித்த சிவோகமே. (3)

பன்னுசாங்கிய சைவமுமிலை பாஞ்சராத்திரமும்மிலை
உன்னுசைனமீ மாம்சையுமிலை யுலகுண்மற்ற மதமிலை
துன்னுஞானிக ளநுபவப்பிர சித்ததூய சொரூபமாய்
பின்னமேயற நின்றபூரணப் பிரமமென்ற சிவோகமே. (4)

பகருமேலிலை கீழிலைப்பர வுள்ளிலைப்புற முமிலை
அகலமோடு வில்குறுக்கிலை யாகிழக்கிலை மேற்கிலை
ககனமென்ன நிறைந்தகண்டசிற் ககனகேவல ரூபமாய்ச்
சுககனச்சுக தாதிபேத விகீனசுத்த சிவோகமே. (5)

வெள்ளையுமிலை கருமையுமிலை வேறுபீத சிவப்பில்லை
~~[illegible]~~
தள்ளியித்தனை ரூபமுந்தவி ராதசோதி சொரூபமா
யுள்ளபூரண ஞானவின்பவு பாதிகீன சிவோகமே. (6)

சாத்திரந்தனைப் போதிப்பானிலை சாத்திரம்படிப் பானிலை
சாத்திரமிலை பாடமுமிலை சாற்றுநீயிலை நானிலை
~~சாத்தியாதி சகத்திலைச்சகல மற்றுமிஞ்சுத லான்மகா~~
~~சாத்திரப்பொரு ளானபூரண சாந்தபோத சிவோகமே. (7)~~

சாக்கிரமிலை சொப்பனமிலை சார்சுழுத்தி யிலையிதில்
தாக்கு விஸ்வனில் தைசதனிலை தங்குபிராஞ்ஞனு மில்லை
றுக்கையுமிலை யவையவித்தை விகாரமாதலி னவைவை [மூன்
நீக்கிநின்றிடு துரியபூரண நித்தபோத சிவோகமே. (8)

அதிவியாபக மாதலாலழி வற்றதத்துவ மென்றதால்
சுதசித்தப் பொருளானதாற்றனில் வேறொன்றைத் தொட
[ராததால்
சததமாயுள சிவமொழிந்திவண் சகமெனும்பொரு ளேயிலை
அதுவிதென்றுரை செய்தவற்கரி தாமகண்டசிவோகமே.(9)

இல்லையேக மெனுஞ்சொலுமிரண் டென்றுசொல்லுவ
[தெங்ஙனே
இல்லைகேவல மோடகேவல மில்லைசூனியா சூனியம்
எல்லையற்ற வகண்டசிற்சுக வேகபூரண வத்துவால்
தொல்லைவேத முடிப்பொருடனைத் தோன்றவெப்படி
[யோதுவாம். (10)

ஸ்ரீ சக்ரபூஜ்ய பகவத்பாதாசார்ய சுவாமிகளவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

விவேக சூடாமணி திருஷ்டித்திரயம்.

சகல வேதாந்த நூலிற் சாரமாய்த் திட்டி மூன்று
திகழுமத் திட்டியாலே திருதியமியாவு நீக்கி
நிகழுமத் துவிதா கண்ட நிருமலப்பிரமந் தன்னை
யகமென வறிந்த வன்றா னகண்டனாய் மூத்த னவன். (538)

பரவிய திட்டி மூன்றின் பகுப்பினைப் பகரக்கேளாய்
விரிவு வாத திட்டி மித்தியா திட்டி மற்றும்
பிரிவிலா நீக்கா நின்ற பிரவிலாப திட்டி மூன்று
மிருமைதீ ரிவைகட்டும் இலக்கண மியம்பு வாமே. (539)

மருவிய சுழுத்திபோலு மகத்தான தானுபோலும்
பிரமமா மென்னிடத்திற் பிறிதுபோற் காண்ப தெல்லா
மொருவனு வேறுமில்லையுவ னானே யென்று
நிருமலப்பார்வை தானே நிகழ்த்திய வாத திட்டி (540)

இருமைசேர் கனவு போலு மிந்திர சாலம்போலும்
பிரமமா மென்னிடத்திற் பிறிதுபோற் காணப் பட்ட
சருவமு மித்தை யாகுஞ் சத்திய னானே யென்று விரிவுறும்
பார்வைதானே மிட்டியா திட்டி யாகும், (541)

பரவிய வாழ்வி போலும் பார்த்திடுங் கனவுபோலு
மொருசிதா காச மான முருவமா மென்னிடத்திற்
பிரிவுபோற் காண்ப வெல்லாம் பிரமமா னானே யென்று
பிரிவிலாப் பார்வை தானே பிரவிலாப திட்டியாகும். (542)

ஓதிய திட்டி மூன்றி லுளத்தினு ளிசைந்ததான
வேதொரு திட்டி யானு மிருமையாந்திருசி யத்தைத்
தீதற நீக்கி நித்தன் திருக்குமாத் திரமாய் நின்ற
பேதமில் பாமு ணர்ந்து பேற்றினை யடையவேண்டும். (543)

பரவிய திட்டி மூன்றும் பரசிதா காசமான
பிரமஞானத்தி னுக்குப் பேணியவேது வேனும்
பிரிவிலாப் பார்வை யாகும் பிரவிலாபதிட்டி தானே
யொருமையா ஞானஞ் சேரவுத்தம வேது வாகும். (544)

திருஷ்டித்திரயம் முற்றிற்று.

